தேர்தல் ஆரம்பித்தது. கட்டடம் நிறைய மக்கள் எள்ளிடவும் இடம் இன்றிக் குழுமி இருந்தார்கள். அமெரிக்காவின் தேர்தல் சட்டப்படி ஒருவர் அந்நாட்டு மொத்த ஓட்டுகளில் பாதிக்கு மேலாகப் பெற வேண்டும். அந்நாட்டு மொத்த ஓட்டுகள் அதன் சட்டப்படி 465. அவற்றுள் ஓர் அபேட்சகர் குறைந்தது 233 ஓட்டுகளேனும் பெற்றுத் தீர வேண்டும்.

முதல் தேர்தல் முடிந்தது. பெட்டியில் இருந்த ஓட்டுகள் கணக்கிடப்பட்டன. லிங்கன் சார்பில் 102-ஓட்டுகள் கிடைத்தன; செவார்டு சார்பில் 173½ ஓட்டுகள் கிடைத்தன. எஞ்சியவை வேறு பலர் சார்பில் போடப்பட்டவை. நாட்டுச் சட்டப்படி எவருக்கேனும் 233 ஓட்டுகளுக்கு அதிகமாக இருக்க வேண்டும் அல்லவா? ஆனால், இத்தேர்தலில் அங்ஙனம் இல்லை. அதனால் இரண்டாம் முறை ஓட்டளிக்கும்படி ஜன நாயகக் கட்சிப் பிரமுகர் வேண்டப்பட்டனர். அவர்களிற் பலர் செவார்டு, லிங்கன் அல்லாத வேறு அபேட்சகர்களுக்கு ஓட்டுக் கொடுத்தவர். அவர்கள், ‘இனிச் செவார்டுக்கேனும், லிங்கனுக்கேனும் ஓட்டுச் செய்ய வேண்டுமே தவிர ஏனையோர்க்குச் செய்வதாற் பயனில்லை,” என்பதை உணர்ந்தார்கள். இரண்டாம் தேர்தல் முடிந்தது. ஓட்டுகள் கணக்கிடப்பட்டன. செவார்டு 184½ ஓட்டுகள் பெற்றார்; லிங்கன் 181 பெற்றார். இம்முறையும் சட்டப்படி எவரும் வெற்றி பெற்றிலர். எனவே, மூன்றாம் தேர்தல் நடைபெற்றது. அதில் லிங்கன் 231½ ஓட்டுகள் பெற்றார்; செவார்டு 180 பெற்றார். லிங்கனுக்கு மேலும்

ஒன்றனை ஓட்டுகள் கிடைத்திருக்குமாயின், அவர் வெற்றி பெற்றவராவர். அந்நேரத்தில் அங்கு அமைதி குடிகொண்டது. அப்பொழுது ஒஹியோ மாகாணப் பிரதிநிதி ஒருவர் எழுந்து, "எங்கள் மாகாண ஓட்டுகள் 'சேஸ்' என்பவர்க்குச் சாதகமாக அளிக்கப்பட்டன. அவற்றுள் நான்கினை லிங்கனுக்குச் சாதகமாகச் சேர்த்துக்கொள்வீராக," எனக் கூவினர். ஆ! உடனே எங்கும் குதூகலம் குடிகொண்டது. அந்த நான்கு ஓட்டுகளால் லிங்கன் மொத்தத்தில் 235½ ஓட்டுகளைப் பெற்றவர் ஆனார். அவரே ஜனநாயகக் கட்சியின் சார்பாகக் குடியரசுத் தலைவர் பதவிக்கு அபேட்சகராக நிறுத்தப்பட்டார்.

இத்தேர்தலால் லிங்கன் பெயர் அமெரிக்கா முழுவதும் பரவிற்று. மூலை முடுக்குகளில் எல்லாம் மக்கள் அவரது பெயரை உச்சரிக்கத் தலைப்பட்டார்கள்: அவர் தேர்தலுக்குப்பின் அமெரிக்கநாட்டின்மிகப்பெரிய அரசியல் நிபுணர்களில் ஒருவராகக் கருதப்பட்டார். எனினும், லிங்கன் நிலைமை வெகு சங்கடமாக இருந்தது. நாட்டில் பல வேறுபட்ட கட்சிகளால் நிறுத்தப்படும் அபேட்சகர்களோடு போராடியன்றோ தேர்தலில் அவர் வெற்றி பெற வேண்டும்? அஃது அத்துணை எளிய காரியம் அன்று.

தலைவர் பதவிக்கு அபேட்சகராக நால்வர் நின்றனர். ஏப்ரஹாம் லிங்கன் ஒருவர்; டெமொக்ராடிக் கட்சியில் டக்ளஸ் பிரிவினர் சார்பாக டக்ளஸ் ஒருவர்; டெமொக்ராடிக் கட்சியில் புச்சானன் பிரிவினர் சார்பாக ஜான் சி. பிரோகன் ரிட்ஜ் என்பவர் ஒருவர்; ஐக்கிய

கட்சியின் சார்பாக ஜான் பெல் என்பவர் ஒருவர். இந்நால்வருடைய அரசியல் கொள்கைகள் பின் வருவன ஆகும் :

1. ஏப்ரஹாம் லிங்கன் :—அடிமைத்தனம் தவறானது. அதனால், அதனை ஓர் எல்லைக்கு உட்படுத்துவது வழக்கம்.

2. டக்ளஸ் :—அடிமைத்தனத்தைப் பற்றிக் கவலை கொள்வதில்லை.

3. பிரோகன் ரிட்ஜ் :—அடிமைத் தனம் மிகவும் நியாயமானது. அது மேலும் பரவ வேண்டுவது அவசியம்.

4. ஜான் பெல் :—அடிமைத்தனத்தைப் பற்றியே கவலை இல்லை. அரசியல் ஒழுங்காக நடைபெற வேண்டும்.

இங்ஙனம் வேறுபட்ட அரசியல் கொள்கைகளை உடைய இந்நால்வருள் ஒருவர் தலைவராக வேண்டும். இவர்களுள் எவரைத் தேர்ந்தெடுப்பதென்பதே எங்கும் வினாவாக இருந்தது.

1860-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தலைவர் தேர்தல் நடைபெற வேண்டும். அதற்குட்பட்ட நாட்களில் அபேட்சகர்கள் பிரசார வேலையில் பெரிதும் ஈடுபட்டார்கள். ஆனால், லிங்கன் தமது சிறிய வீட்டில் அமைதியாக இருந்து வந்தார். அவருடைய பழைய நண்பர்கள்—கிராமவாசிகள்—அவரைக் கண்டு வாழ்த்திச் சென்றார்கள். லிங்கன் அவர்களைப் பழைய நட்பு முறைப்படியே முக மலர்ச்சியோடு வரவேற்று

அளவளாவினர். அவர்கள் பெரிதும் மனங் களித்தார்கள். அவர்கள் மஹா யோக்கியரான லிங்கன் வெற்றி பெற வேண்டுமென இறைவரைத் துதித்தார்கள்.

இங்கிலேயில் வடமாகாணங்களில் லிங்கனை ஆதரித்து இளைஞர் பலர் நூற்றுக்கணக்காகத் தெருக்களில் ஊர் வலமாகச் சென்றனர். அவ்விளைஞர்கள் அனைவரும் ஒரே விதமான ஆடைகளை அணிந்துகொண்டு, கைகளில் ஒரே விதமான வர்ண விளக்குகளை எடுத்துக்கொண்டு, இராக்காலங்களில் நகரங்களின் தெருக்களில் போர் வீரர் சென்றதைப் போல ஒரே ஒழுங்குடன் சென்றார்கள். அவர்கள் அங்ஙனம் சென்ற காட்சி, வெற்றி வீரர்கள் போரினின்றும் மீண்டு வந்ததை ஒத்திருந்தது. அக்காட்சியைக் கண்ணுற்ற பொது மக்கள் அவர்கள் மீது அன்பு கொண்டார்கள்; அவர்கள் அன்புடன் ஆதரித்த லிங்கனுக்கே தங்கள் ஓட்டுகளைக் கொடுப்பதாகத் தீர்மானித்தார்கள்.

1860-ஆம் வருடம் நவம்பர் மாதம் 6-ஆந் தேதி தேர்தல் நடைபெற்றது. மொத்த ஓட்டுகள் 303. அவற்றுள் லிங்கனுக்கு 180ம், டக்ளஸுக்கு 12ம், பிரோகன் ரிட்ஜுக்கு 72ம், ஜான் பெல்லுக்கு 39ம் கிடைத்தன. லிங்கன் மஹத்தான வெற்றி பெற்றார். குடிசையிற் பிறந்த லிங்கன் குபேர நாட்டுத் தலைவர் ஆனார்; வாஷிங்டன் நகரில் உள்ள * வெள்ளை மாளிகைக்குத் (White House) தலைவரானார்.

* வெள்ளை மாளிகை குடியரசுத் தலைவர் வசிக்கும் இடமாகும்; சலவைக் கற்களால் கட்டப்பட்டதாதலின், இப்பெயர் பெற்றது.

# 8. லிங்கன்—குடியரசுத் தலைவர்

ஏப்ரஹாம் லிங்கன் 1860-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்திலேயே தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆயினும், அவர் ஆட்சியை ஏற்றுக்கொள்ள வேண்டியது 1861-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 4-ஆம் தேதியிலாகும். இதற்கிடைப்பட்ட காலத்தில் புச்சானனே தலைவராக இருந்து வந்தார். லிங்கனது தேர்தலுக்குப் பிறகு அமெரிக்காவில் பெரிய மாறுதலும் குழப்பமும் ஏற்பட்டன. 'ஜன நாயகக் கட்சியினர் ஆதிக்கம் லிங்கன் ஆட்சியில் வலுப்பெறும்; டெமொக்ராடிக் கட்சியினர் வலியற்றவர் ஆவர். லிங்கன் தமது கட்சிக் கொள்கைப்படி அடிமைத்தனத்தை ஒழிக்க முற்படுவார். வடமாகாணங்களின் ஆட்சியில் இன்பமுறும் அடிமை ஆதரிக்கின்ற நமது கதி யாதாகுமோ!' என்று தென் மாகாணங்களின் மக்கள் யோசனையில் ஆழ்ந்தார்கள்.

வட மாகாணங்கள் லிங்கன் தேர்தலை மனமார வரவேற்றன. எக்காரணத்தை முன்னிட்டும் ஐக்கிய அரசாட்சி நிலைநிறுத்தப்பட வேண்டும் என்பதே அவற்றின் இறுதியான கொள்கை. ஆனால்,தென்மாகாணங்களோ, 'ஒவ்வொரு மாகாணமும் முதலில் தனது சொந்த நலத்தைப் பாதுகாக்க வேண்டும்; பின்பே ஐக்கியத்தைப் பற்றி நினைக்க வேண்டும்; ஐக்கிய அரசாட்சியின் போக்குப் பிடித்தமாயிராவிடின், எந்த மாகாணமும் ஐக்கியத்தினின்றும் பிரியலாம்,' என்பதை அறிவித்தன.

இவ்வறிக்கையைக் கண்ட லிங்கன் யோசனையில் ஆழ்ந்தார் ; 'ஒவ்வொரு மாகாணமும் தன் விருப்பம் போல ஐக்கியத்தினின்றும் பிரிவதாயின், ஐக்கிய அரசியலுக்குத்தான் மதிப்பென்ன இருக்கிறது! ஐக்கிய அரசியலின் தத்துவம் யாது? ஐக்கிய அமெரிக்கா ஓர் ஏகாதிபத்திய நாடாக இருப்பதிலிருந்து சிதறுண்டு பல சிறுசிறு ராச்சியங்களாக அன்றோ பிரிந்துவிடும் ? அந்நிலையில் அமெரிக்காவுக்குப் பெருமை உண்டாகுமா ? அமெரிக்காவின் பெருமை அடியோடு அழிந்துவிடுமே!' என்று வருந்தினர். எனினும், அவர் அந்நிலையில் ஒன்றும் செய்யக் கூடவில்லை. அவர், 'நான் அரசியலை ஏற்றவுடன் தென் மாகாணங்களின் இத்தகைய துணிச்சலை அடக்குவேன். எதனை முன்னிட்டும் எந்த நாடும் ஐக்கிய அரசியலினின்றும் பிரிவது கூடாது,' என முடிவு செய்தார்.

தேர்தல் நடந்த ஆறு வாரங்கள் கழிந்ததும் தென் கரோலினு மாகாணம் ஒரு மஹாநாட்டைக் கூட்டினது ; அம்மஹாநாட்டில் 'தென் கரோலினு மாகாணம் சுதந்திர மாகாணமாக இருக்க விரும்புகின்றது. அது இனி ஐக்கிய அமைப்பினின்றும் பிரிந்துவிடும்,' என்னும் தீர்மானத்தை நிறைவேற்றினது.

காட்டுத் தீப்போல நாடெங்கும் பரந்த இத்தீர்மானத்தைக் கேட்ட வட மாகாணங்கள் தென்கரோலினுவின் துணிச்சலைக் கண்டு திகைப்படைந்தன. அவை யாவும் வாஷிங்டன் நகரை நோக்கின. வாஷிங்டன் நகரில் வெள்ளை மாளிகைத் தலைவராக இருந்த புச்சா-

னன் அந்நெருக்கடியில் தலையிட விரும்பவில்லை. அவர், 'நமக்கென்ன ! புதிய தலைவர் இவ்விஷயத்தைத் தீர்த்துக்கொள்ளட்டும்,' என்றெண்ணினர். அதனால், அவர், 'இச்சங்கடத்தில் தலையிட எனக்கு அதிகாரமில்லை,' எனக் கூறிவிட்டார். இவ்விடை தென் மாகாணங்களை மகிழச் செய்தது. வட மாகாணங்கள் சீற்றங் கொண்டன.

புச்சானன் விடையை அறிந்த லிங்கன், 'ஆம்! அவர்கள் கூறினது உண்மையே. நான் பதவியேற்றதும் இந்நெருக்கடியில் தலையிடுவேன்; ஓர் ஒழுங்குக்குக் கொண்டுவருவேன்,' என்றார்.

திடீரென ஏற்பட்ட நெருக்கடியான நிலையினை உள்ளவாறு உணர்ந்தவர் லிங்கன் ஒருவரே அல்லர். ஜெனரல் வின்பீல்ட் ஸ்காட்டு (General Winfield Scot) என்னும் தளகர்த்தரும் அமெரிக்கா ஐக்கிய அரசியலுக்கு வர இருந்த ஆபத்தினை உணர்ந்தார். அந்நிலையில் தென் கரோலினவின் செய்கையைப் பின்பற்றி புளோரிடா, அலபாமா, மிசிசிப்பி, ஜார்க்கியா, லூய்ச்சியனா, டெக்சாஸ் என்னும் ஆறு மாகாணங்களும் ஐக்கிய அரசியலினின்றும் பிரிந்துவிட்டன. அவ்வேழு மாகாணங்களும் ஒன்று கூடித் தமக்குள் ஓர் ஐக்கிய அரசியலை ஏற்படுத்திக்கொண்டன; ஐக்கிய அரசியலுக்கு ஜெப்பர்சன் டேவிஸ் (Jefferson Davis) என்பவரைத் தலைவராக்கின. ஆனால், சட்டப்படி அவ்வேழு மாகாணங்களும் இன்னும் ஐக்கிய அரசியலையே சேர்ந்தனவாக இருந்தன. எனினும், அவை தாமாகவே தமக்குள் புதிதாக ஓர் அரசியலை

அமைத்துக்கொண்டன; தத்தம் அரசியலைப் புதிய முறையில் கவனித்து வந்தன. அத்தனை குழப்பங்கட்கிடையே தலைவர் புசானன் வாளா இருந்தனர். 'நான் இவ்விஷயத்தில் தலையிட உரிமை அற்றவன்,' என்று முன்போலவே அவர் கூறிவிட்டனர். ஆனால், 'ஸ்பிரிங்பீல்டிலிருந்து நீவிர் ஐக்கியத்தினின்றும் பிரியவே கூடாது!' என்ற வார்த்தைகள் இடி முழக்கம் போல நாடெங்கும் ஒலித்தன.

தென் மாகாணங்களின் ஐக்கியத்தைக் கண்ட வட மாகாணங்களுள் சில, 'அவை தம் விருப்பம் போலப் பிரிந்து போகட்டுமே! நாம் ஏன் தடை செய்ய வேண்டும்! அவை பிரிவதால், அடிமைத் தொல்லையும் நம்மை விட்டு ஒழியும். அவற்றின் முழு விருப்பம்போல அவை பிரிந்து போவதே மேல்,' என்றன.

புதிய ஐக்கிய மாகாணங்கள் அமெரிக்க ஐக்கிய அரசாங்கக் கப்பல்களை வழி மறித்து, அவற்றில் இருந்த ஐக்கிய அரசாங்கக் கொடிகளைப் பிய்த்தெறிந்து, தங்கள் கொடியை நாட்டின. சுருங்கக் கூறின், அவை அமெரிக்க ஐக்கிய அரசாங்கத்தோடு எத்தகைய போருக்கும் தயாராக இருந்தன.

1861-ஆம் ஆண்டும் பிறந்தது. பிப்ரவரி மாதம் 11-ஆந் தேதி லிங்கன் ஸ்பிரிங்பீல்டை விட்டு வாஷிங்டனுக்குப் புறப்பட்டார். அவர் வழியில் பல சிறந்த நகரங்களைப் பார்த்துவிட்டு வாஷிங்டனுக்குப் போக இசைந்தார். அந்நகரங்களைப் பார்ப்பதால் அங்கிருந்த

மக்கள் மனத்தைத் தம் வயப்படுத்தலாம் என்பதே அவரது நோக்கம். அவர் ஸ்பிரிங் பீல்டை விட்டுப் புறப்பட்டபோது சுமார் ஆயிரம் மக்கள் அவரை வழி-யனுப்பி ஆரவாரம் செய்தார்கள். அப்போது அவர் மலர்ந்த முகத்தோடு அவர்களை நோக்கிக் கீழ் வரு-மாறு பேசி விடை பெற்றார் :

'என் நண்பர்களே, உங்களை விட்டுப் பிரிய நான் மிகவும் வருந்துகின்றேன். இந்த இடத்துக்கும் உங்-கட்கும் நான் மிகவும் கடமைப்பட்டவனாயிருக்கிறேன். இங்கு யான் இருபத்தைந்து ஆண்டுகளைக் கழித்தேன். எனக்குப் பல குழந்தைகள் இங்குப் பிறந்தன ; ஒன்று இங்குத்தான் இறந்தது. எனக்கு முன்னே இருக்கின்ற மறைத்தான பல வேலைகளை வெற்றிகரமாக முடித்து-விட்டு நான் எப்பொழுது திரும்பி வருவேன் என்-பதைச் சொல்ல இயலாத நிலையில் இருக்கின்றேன். ஆண்டவர் துணையைத் துணையாகக் கொண்டே நான் வாஷிங்டனுக்குச் செல்லுகிறேன். அவரது உதவி இன்றி யான் எச்சிறிய காரியத்தையும் செய்யவல்லேன் அல்லேன். அரசியலில் என் கொள்கைகள் வெற்றி பெறுமாறு அவர் அருள் புரிவாரென்பதை நம்பு-கின்றேன். எல்லாம் நன்மையாகவே முடியும் என்-பதை நாம் நம்புவோமாக. ஆண்டவரைக் குறித்து நீங்கள் செய்யும் பிரார்த்தனையில் உங்கள் பழைய நண்பனாகிய என்னைப் பற்றியும் குறிப்பிடுமாறு உங்-களை வேண்டுகின்றேன். உங்கள் மனமார்ந்த பேரன்பு எனக்குத் துணை புரியுமாக. நான் விடை பெற்றுக்-கொள்கின்றேன்.'

லிங்கன் சென்ற நகரங்களில் எல்லாம் அவருக்குக் குதூகல வரவேற்பு அளிக்கப்பட்டது. அவர் பிலடெல்பியா நகரில் தங்கின போது, பால்டிமூர் வழியாகச் செல்லுகையில் சிலர் தம்மைக் கொல்லச் சதியாலோசனை செய்திருப்பதாகக் கேள்வியுற்றார். உடனே அவர் தமது பிரயாண அட்டவணையை மாற்றிச் சுகமாக வாஷிங்டன் நகரை அடைந்தார். மார்ச்சு மாதம் நான்காந் தேதி காங்கிரஸ் மாளிகையில் மகத்தான விழாக் கொண்டாடப்பட்டது. லிங்கன் தமது தலைவர் பதவியைப் பெருத்த கர கோஷத்தினிடையே ஏற்றார். அப்பொழுது அவர் தமது தொப்பியை மாட்டச் சுவரை நோக்கினார்; வேடிக்கையாக, 'எனது தொப்பியை மாட்ட ஓர் ஆணியேனும் இங்குக் காணப்படவில்லையே!' என்றார். உடனே டக்ளஸ் குதித்து, 'நான் தலைவராக இராவிடினும், அவரது தொப்பியையேனும் தாங்கக்கூடும்,' என்று வேடிக்கையாகக் கூறினார்.

பின்னர் ஏப்ரஹாம் லிங்கன் மிகவும் அழுத்தமான குரலில் அவையோரை நோக்கிப் பின் வருமாறு பேசினார்: 'அமெரிக்க ஐக்கிய மாகாணங்களின் பிரதிநிதிகளான என் உரிமைச் சகோதரர்களே, தலைவர் பதவியை ஏற்கின்ற முறையில் நான் இப்பொழுது உங்கள் முன்னிலையில் இருக்கின்றேன். நான் இப்பொழுது அரசியல் விஷயங்களை விரிவாகப் பேச விரும்பவில்லை; ஆனால், ஒன்றை மட்டும் குறிப்பிட விரும்புகின்றேன்: ஜன நாயகக் கட்சியைச் சேர்ந்த ஒருவர் தலைவரானதால், தென் மாகாணங்கள் தங்கள் செல்வச் சுதந்திரத்தையும் பிறவற்றையும் பற்றி அஞ்-

சுவதாகத் தெரிகிறது. அவை அங்ஙனம் அஞ்சுவதற்குரிய ஒரு காரணத்தையும் யான் காணவில்லை. நான் முன்னொரு முறை எனது பிரசங்கம் ஒன்றில் குறிப்பிட்ட விஷயத்தை இங்குக் குறிப்பிட விரும்புகிறேன். அஃதாவது, இப்பொழுது அடிமைத்தனம் இருந்துவரும் மாகாணங்களின் விஷயங்களில் நான் பிரவேசிக்க எனக்கு எவ்வித உரிமையும் இல்லை என்பதே. இதன்றி என்னைத் தேர்ந்தெடுத்த அறிஞர்கள், 'அந்தந்த மாகாணங்களின் உள் நாட்டு விஷயங்களில் தலைவர் தலையிடலாகாது,' என முன்னரே தீர்மானம் ஒன்றைச் செய்துள்ளார்கள். அதனையும் இப்போது உங்கட்கு நினைவூட்டுகிறேன்.

'எனது புதிய அரசியலில் எல்லா மாகாணங்களும் நேர்மையாகவே கவனிக்கப்படும். அவை முன் மாதிரியே சமமாகப் பாவிக்கப்படும். இதைப்பற்றி எந்த மாகாணமும் சிறிதும் அஞ்ச வேண்டுவதில்லை. எந்த ஒரு மாகாணமும் பிரிவதற்கு வகையில்லாதபடி நம் முன்னோர் ஐக்கிய அரசியலை அமைத்துள்ளனர். அவர்தம் பரிசுத்தமான அரசியல் அமைப்பில் நாம் தலையிடுதல் பெருந்தவறு. ஆதலின், எல்லா மாகாணங்களும் ஐக்கிய அரசியலில் சேர்ந்தே இருத்தல் வேண்டும்; பிரிவினை கூடாது. சகோதரர்களே, என் மனத்தில் எத்தகைய எண்ணத்தையும் நான் மறைத்து வைக்கவில்லை. இப்பொழுது நான் தூய மனத்தோடு தலைவர் பதவியை ஏற்றுக்கொண்டேன். இனி நான் உங்கள் பேருதவியைக் கொண்டு என்னால் இயன்றதை நாட்டுக்குச் செய்வேன்.'

# 9. வட தென் மாகாணங்களின் போர்

## (1861—1865)

ஏப்ரஹாம் லிங்கன் தலைவரானதும் தென் மாகாணங்கள் லிங்கனைப் 'படிப்பில்லாதவன்,' எனத் தூற்றத் தொடங்கின. அவற்றின் தலைவரான ஜேப்பர்சன் என்பார், 'மஹத்தான எதிர் காலம் நம்மை நோக்கி உள்ளது. வட மாகாணங்களிற் புல் முளைக்கும்படி செய்துவிடுவோம். நாம் அவற்றோடு போர் தொடங்குவதே சரி,' என்று கர்ச்சித்தார். அக்கர்ச்சனையைக் கேட்ட அரசியல் வாதிகள் அஞ்சினார்கள். வட மாகாணங்கள் பயந்தன. ஆனால், அஞ்சா நெஞ்சினரான லிங்கன் அக்கர்ச்சனையைப் பொருட்படுத்தவில்லை. அவர் பின் வருமாறு தீர்மானித்துவிட்டார்: 'தென் மாகாணங்களோடு நாமாகப் போர் செய்தோம் என்ற பழி வர வேண்டா. அவை தாமாகக் கிளம்பிப் போருக்கு வருமாயின், அவற்றிற்குத் தக்க பாடங் கற்பித்தல் நமது கடமையாகும்.'

தலைவர் பதவியை ஏற்றதும் லிங்கன் அமைச்சர் சபையை அமைக்கலானார். தலைவர் தமது விருப்பம் போல எவரையும் மந்திரியாக்கலாம். ஆனால், அம்மந்திரியின் நியமனத்தைக் காங்கிரஸ் அங்கத்தினருள் மூன்றில் இரண்டு பங்கினர் எதிர்ப்பாராயின், தலைவர் வேறொருவரை மந்திரியாக நியமித்தல் வேண்டும். இதுவே அமெரிக்க அரசியலின் சட்டமாகும். இவற்-

றையெல்லாம் யோசித்த லிங்கன் தம்மோடு தலைவர் பதவிக்கு அபேட்சகராக நின்ற செவார்டு எனும் தம் கட்சியினரை உள் நாட்டு மந்திரியார் ஆக்கினார். செவார்டு முதலில் 'லிங்கன் படிப்பில்லாதவர். அவரை நம் மனம்போல ஆட்டி வைக்கலாம்,' என்றெண்ணினார். ஆனால், பாவம்! விரைவில் அவர் லிங்கன் தம்மைவிடச் சிறந்த அரசியல் தலைவர்; சிறந்த அறிஞர்; சிறந்த ஒழுக்கமுள்ளவர்; அவரைத் தம் வயப்படுத்த இயலாது என்பதை உணர்ந்தார். அன்று முதல் அவர் லிங்கனிடம் பய பக்தியுடன் நடந்து வந்தார். லிங்கனும் அவரிடம் பேரன்பு கொண்டு இறக்கும் வரையில் சிறந்த நண்பராக இருந்தார்.

லிங்கன் காங்கிரஸ் சபையில் செய்த தலைமைப் பேருரைக்குப் பின்னர்த் தென் கரோலினாவிலிருந்து சில பிரதிநிதிகள் தங்கள் மாகாணப் பிரிவினையைப்பற்றி லிங்கனோடு பேச வாஷிங்டனை அடைந்தார்கள்; ஆனால், லிங்கன் அவர்களைத் தமது மாளிகைக்குள் நுழைய அனுமதிக்கவில்லை. எனவே, அவர்கள் தங்கள் மாகாணத்துக்குத் திரும்பிச் சென்றார்கள். இதனால் சீற்றங் கொண்ட புதிய குடியரசினர் ஐக்கிய அரசாங்கத்துக்குச் சொந்தமான சம்டர் (Fort Sumter)என்னும் கோட்டையைத் தாக்கத் துணிந்தனர். அக்கோட்டையில் குடியரசுச் சேனைத் தலைவர் மேஜர் ராபர்ட் ஆண்டர்சன் என்பவர் இருந்து வந்தார். 'நாம் அக்கோட்டையைத் தாக்கமுயன்றால் வடமாகாணங்கள் போருக்கு எழும்; போர் தொடங்கலாம் என்ற எண்ணத்துடனேயே புதிய குடியரசினர் சம்டர் கோட்டையைத் தாக்கினர்.

கோட்டைக்குள் இருந்த சேனைத் தலைவர் தமக்குதவியாகப் படைகளை அனுப்பும்படி தலைவர்க்கு நிருபம் வரைந்தார். தலைவரான லிங்கன் சிறந்த ஞானமுடையவர்; 'இன்னும் சிறிது பொறுப்போம்,' என்றெண்ணி வாளா இருந்தனர். பகைவர் ஆதிக்கம் வலுக்க ஆரம்பித்தது. உடனே தலைவர் வேறு வழி இன்றிக் காலாட்படையையும் சில போர்க் கப்பல்களையும் அனுப்பும்படி கட்டளையிட்டார். கப்பல்கள் சாமான்களைச் சேமித்துக்கொண்டு புறப்படச் சிறிது தாமதம் ஏற்பட்டது. அதற்குள் கோட்டையைப் பகைவர் பிடித்துக்கொண்டனர். அங்கிருந்த ஜெனரல் பகைவர் கோட்டைமீது வைக்கப்பட்டு இருந்த ஐக்கிய அரசியற் கொடியை எடுத்தெறிந்து, தமது புதிய ஐக்கியக் கொடியைப் பறக்க விட்டனர்.

சம்டர் கோட்டை பிடிபட்டதை அறிந்த வட மாகாணங்களின் மக்கள் திடுக்கிட்டார்கள். லிங்கன் உடனே 65,000 போர் வீரரையும் 75,000 தேசபக்தி கொண்ட இளைஞரையும் கூட்டுமாறு சேனைத் தலைவர்க்குக் கட்டளையிட்டார். ஒவ்வொரு வட மாகாணத்திலிருந்தும் இளைஞர் பலர் ஆரவாரம் செய்துகொண்டு சேனையிற் சேர்ந்தனர். அவர்கள் போரை அறியாதவர்கள். பயிர் செய்த தென் மாகாண மக்கள் போரில் வெற்றிபெற மாட்டார்கள் என்பது அவ்விளைஞர்களின் கருத்து. அவர்கள் வாஷிங்டன் நகரில் ஒன்று சேர்ந்ததும், சேனைகள் புறப்பட்டன.

முதற் போர் 1861-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 21-ஆந் தேதி வாஷிங்டன் நகருக்கு அருகேயுள்ள

புயூல்ரன் (Bule Run) என்னும் இடத்தில் நடந்தது. அப்போரில் தென் மாகாணத்தார் வெற்றி பெற்றனர். தோல்வியைக் கனவிலும் நினைத்தறியாத வட மாகாணத்தார் தாம் தோல்வியுற்றதைக் கண்டதும் மனங் கலங்கினர் ; பகைவரைக் கண்டு அஞ்சினர் ; எனினும், ஆகஸ்டுமாதத்தில் ஜார்ஜ் பி. மக்லீன் என்பவர் சேனைத் தலைவராக வந்ததும் வெற்றி தமதே எனமகிழ்ந்தனர்.

ஒரு வருடம் சென்றது. போர் நிற்கவில்லை. அந்நிலையில் லிங்கன், 'வட மாகாணங்களில் இருக்கும் நீக்ரோவரும் சேனையில் பங்கெடுத்துக்கொள்ளலாம்,' என்னும் அறிக்கையை வெளியிட்டார். உடனே 1,30,000 நீக்ரோவர் சேனையிற் சேர்ந்தனர். 'அவர்கள் போர் நடக்கும் இடங்களில் அமெரிக்க வீரர்கட்கு வேண்டுவன செய்வார்கள்; போரும் புரிவார்கள்; உணவுப்பொருள்களையும் வெடிகுண்டு மருந்துகளையும் பாதுகாப்பார்கள்,' என்று லிங்கன் நம்பினர். அதனல், அவர், 'போரில் நீக்ரோவரைச் சேர்க்கலாகாது,' எனத் தம்மோடு வாதித்த தம் நண்பர் வார்த்தைகளைக் கேட்கவில்லை. அவர் அவர்களை நோக்கி, "எனது முழு நோக்கமும் ஐக்கிய அரசியலைக் காப்பாற்ற வேண்டும் என்பதே. அடிமைத்தனத்தைக் காப்பாற்ற வேண்டுமென்பதோ அதனை அழிக்க வேண்டும் என்பதோ என் கருத்தன்று," என்று பதிலிறுத்தார். ஆனல், அவர் அடிமைகளை விடுதலை செய்தல் வேண்டும் என்பதை முன்னரே தீர்மானித்துவிட்டார் ; எனினும், அதற்குரிய காலம் அதுவன்று என்றெண்ணி வாளா இருந்தார்.

சேனைத் தலைவரான மக்லீன் என்பவர் மிகவும் சோம்பேறி. அவர் எதனையும் மெதுவாகச் செய்யும் இயல்புடையவர். அவரைச் சேனைத் தலைவராக்கினதை லிங்கன் நண்பர் ஒருவர் ஊகித்தார். அவர் லிங்கனை நோக்கி, "மக்லீன் உம்மைப் பல முறை—நீர் தலைவர் என்பதனையும் மறந்து—அவர் மாளிகை வாயிலிற் காக்க வைத்தார் அல்லவா? அத்தகையவரை நீர் இன்னும் சேனைத் தலைவராக வைத்திருப்பதாற்றான் போர் இன்னும் நடந்துகொண்டிருக்கிறது," என்றார். அப்பொழுது லிங்கன் நகைத்துக்கொண்டே, 'நண்பரே, அவர் என்னைத் தம் வீட்டுவாயிலில் தாமதிக்கச் செய்ததைப்பற்றி யான் கவலைப்படவில்லை. அவர் நமக்கு வெற்றியைக் கொணர்வாராயின், நான் அவரது குதிரையைப் பிடித்துக்கொண்டு நிற்கவும் தயாராக இருக்கிறேன்,' என்றார். ஆ! இப்பெரியாரின் பெருந்தன்மையை என்னென்ன வியப்பது!

மக்லீனால் ஒரு வேலையும் நடைபெறுதென்பதை முற்றிலும் உணர்ந்த லிங்கன் அவரை அப்பதவியினின்றும் விலக்கி வேறொருவரை நியமித்தார். உலிஸிஸ் எஸ். கிராண்டு (Ulysses S. Grant) என்பவர் விக்ஸ்பர்க்கு என்ற இடத்தில் தென்மாகாணத்தாரை முற்றிலும் முறியடித்தார். ஜெனரல் மீயேட் என்பவர் பகைவர் சேனையின் தளகர்த்தரைக் கெட்டிஸ்பர்க்கு என்ற இடத்தில் பலமாக முறியடித்தார்.

கெட்டிஸ்பர்க்கு என்ற இடத்தில் போரில் இறந்த வட மாகாண வீரர்களின் உடல்களைப் புதைக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அக்காரியம் நடைபெற்ற

போது தலைவர் லிங்கன் அவ்விடத்தில் வெகு உருக்க-மான சொற்பொழிவு ஒன்றினைப் பின்வருமாறு நிகழ்த்-தினர்: " எண்பத்தேழு ஆண்டுகட்கு முன்னர் இந்த நாட்டில் நம் முன்னேர் ஒரு மஹத்தான இராச்சி-யத்தை—பிரிக்க முடியாத ஐக்கிய ராச்சியத்தை ஏற்-படுத்தினர். அதே நாட்டில் நாம் இப்பொழுது ஒரு-வரோடொருவர் சண்டையிட்டுக்கொண்டு இருக்கின்-ரும். நம் முன்னேர், 'உலகில் உள்ள எல்லா மக்-களும் சம நிலையினரே,' என்றனர். ஆனல், நம்மவரோ, இப்பொழுது 'உயர்வு—தாழ்வு' என்கின்றனர். அனைவரும் சுதந்திரத்தோடு வாழ வேண்டும் என்ற எண்ணங் கொண்டதற்குள் நம் முன்னேர், பிரிட்டிஷாரோடு போராடிச் சுதந்திரத்தை நிலை நாட்டி-னர். அதனை இப்பொழுது இருக்கின்றவர் அறவே மறந்து வருகின்றனர்.

" இப்பொழுது இப்போரில் உயிர் விட்ட வீரர்-கள் நாட்டு ஐக்கியத்துக்கெனவே போராடினவர்கள். அவர்கள் நமது நாட்டுச் சரித்திரத்தில் குறிக்கப்படத் தக்கவர்கள். அவர்களுடைய பெயர்கள் அமெரிக்கா-வின் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களாற் பொறிக்கப்படும். அவர்கள் எதன்பொருட்டு உயிர் விட்டார்-களோ, அதனை நாம் நிறைவேற்றுவோமாக! இறைவ-ரின் ஆதரவின் கீழ் உள்ள இந்நாடு புதிய சுதந்-திரத்தோடு மீண்டும் மிளிர்வதாக! இந்த அமெரிக்க ஐக்கிய மாகாணங்கள் அமெரிக்கர் பொருட்டு—அமெரிக்கருக்காக உலகில் என்றும் நிலைபெற்றிருப்-பதாக! "

இவ்வரிய—உருக்கமான பிரசங்கம் உலகம் உள்ளளவும் நிலைத்திருக்கத் தக்கது. இஃது ஆங்கில மொழி உலகில் உள்ள வரையிலும் நிலைத்திருப்பது நிச்சயம். இதனை இன்றும் கோடிக்கணக்கான உலக மக்கள் உச்சிமேற்கொண்டு போற்றி வருகின்றனர்.

இக்காரியங்கட்கு இடையே நான்கு ஆண்டுகள் கடந்தன. குடியரசுத் தலைவர் பதவிக்கு 1864-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் தேர்தல் நடைபெற இருந்தது. போர் முற்றுப்பெறவில்லை. 'லிங்கன் விரைவில் போரை முடிப்பவராகக் காணப்படவில்லை,' என அவர் மீது குறை கூறிக்கொண்டு இருந்த சிலர், சேனைத்தலைவரான மக்லீன் என்பவரை அபேட்சகராக நிறுத்தினர். வட மாகாணத்தார் லிங்கனையே நிறுத்தினர். குறித்த நாளில் தேர்தல் நடைபெற்றது. லிங்கன் 233 ஓட்டுகளில் 212 ஓட்டுகளைப்பெற்றார்; மக்லீன் 21 ஓட்டுகளைப் பெற்றார். எனவே, லிங்கன் குடியரசுத் தலைவராக இரண்டாம் முறை தேர்ந்தெடுக்கப்பட்டார்.

'லிங்கன் போரை இப்பொழுது நிறுத்தமாட்டார். வட மாகாணங்கள் தென் மாகாணங்களை முற்றிலும் முறியடித்த பின்னரே அவர் போரை நிறுத்துவார். அவர் தென் மாகாணங்களை ஐக்கிய அரசியலில் சேர்க்காது விடார். அவரே அமெரிக்காவுக்கு ஏற்ற தலைவர் என அவர்மீது நம்பிக்கை கொண்ட மக்கள் நினைத்தார்கள். ஆ! அவர்கள் நினைத்தது முற்றிலும் பொருத்தமானதே. லிங்கனும் அம்மாதிரியே நினைத்திருந்தார்.

போர் நடந்துகொண்டே இருந்தது. லிங்கன் போர் சம்பந்தமான சிறிய விஷயத்தையும் வெகு கவனமாகக் கவனித்து வந்தார். அவர் தமது பதவி-யால் பெருமைப்படாமல், போர் வீரர்களை மிகவும் அன்போடு நடத்துமாறு தலைவர்கட்குக் கட்டளை இட்-டார். அவர்கள் மனம் மகிழும்படி லிங்கன் பேசி வந்-தார். ஒரு முறை அவர் அவர்களை நோக்கி, " என் அன்பான வீரர்களே, நான் உங்கள் நாட்டுப்பற்றை மிகவும் பாராட்டுகின்றேன். உங்களாற்றான் ஐக்கிய அரசியல் சிதறுண்டு போகாமல் காப்பாற்றப்பட வேண்டும். இது காப்பாற்றப்படின் இப்பொழுது நான் இருந்து வருகின்ற வெள்ளை மாளிகை-யில் நாளை உங்கள் பிள்ளைகளோ, உறவினரோ தலைவர்களாக இருக்கலாம். எல்லாம் உங்களைப் பொறுத்துள்ளது. தலைவர் பதவியே வாழ்க்கையில் மிகவும் உயர்ந்த பதவி. அதனைப் பெற ஒவ்வொருவ-ரும் போராடவேண்டும். போராட்டமின்றேல் வெற்றி-யில்லை ; வாழ்க்கையில்லை. ஆதலின், போராட்டத்திற்-காக-வாழ்க்கையின் உயர்வுக்காகத் தலைவர்பதவி நிலைத்-திருக்க வேண்டுவதே. அது நிலைத்திருக்க வேண்டு-மாயின், ஐக்கிய அரசியல் அமைப்பு நிலைபெற வேண்-டும். ஆதலின், நீங்கள் அதனை நிலைபெறச் செய்யுங்-கள்," என்று அன்போடு கூறி முடித்தார்.

1864-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 16-ஆந்தேதி வில்லியம் டி' ஷேர்மான் என்னும் சேனைத் தலைவர் லிங்கன் கட்டளைப்படி பகைவரது தலை நகரான ரிச்-மாண்டு நகரைக் கைப்பற்றப் புறப்பட்டார். அவரிட-

மிருந்த 60,000 போர் வீரர் தூக்கிலிடப்பட்ட ஜான் பிரௌனைப் பற்றிப் பாடிக்கொண்டு ஜார்ஜியா-கரோ-லினு மாகாணங்களுள் நுழைந்தார்கள். அவர்களோடு தென் மாகாணங்களில் இருந்த சுதந்திரமக்கள் சேர்ந்து கொண்டார்கள். ஒவ்வொரு நகரமும் ஷெர்மான் படைகளுக்குக் கீழ்ப்படிந்து நடந்தது. முடிவில் ஷெர்-மான் சாவன்னு நகரைக் கைப்பற்றினுர். அவர் தலை-வருக்கு எழுதின கடிதம் ஒன்றில், "நான் சாவன்னு நகரையும் 25,000 பஞ்சு மூட்டைகளையும் 150 துப்-பாக்கிகளையும் கிறிஸ்துமஸ் விழாவிற்கெனத் தங்கட்-குப் பரிசளிக்க விரும்புகிறேன்," என்று வரைந்-திருந்தார். உடனே தலைவர் லிங்கன், "மிகுந்த மகிழ்ச்சியடைந்தேன். கடவுள் உமக்கு வெற்றியைத் தொடர்ந்து தருவாராக. எனது நன்றியறிதலையும் அன்பான விசாரிப்பையும் உமது படை வீரர்க்கும் உத்தியோகஸ்தர்க்கும் அறிவிப்பீராக," என்று பதில் அளித்தார்.

சாவன்னு நகரம் பிடிபட்டதையுணர்ந்த தென் மாகாண மக்கள் நிலைகலங்கினுர்கள். தென் மாகா-ணங்களில் ஏற்பட்ட புதிய அரசாங்கம் போர் தொடங்-கின போனது பணத்திற்குப் பதிலாகக் காகித நோட்டுகளை அச்சடித்து வழங்கியிருந்தது. அந்த நோட்டுகள் புதிய அரசியலில் செல்லுமே தவிர வேறெந்த அரசாங்கத்திலும் செல்லா. புதிய அர-சாங்கத்துத் தலை நகரான ரிச்மாண்டு கைப்பற்றப் படின், அம்மாகாணங்களில் இருந்த செல்வந்தர் அனை-வரும் அழிந்துவிடுவர். வட மாகாணங்கள் தென்

மாகாணங்களை வென்றுவிடின், தென் மாகாணங்கள் அமெரிக்க ஐக்கிய அரசியலுக்கு உட்பட்டுவிடும் அன்றோ? அப்பொழுது அவர்கள் வைத்திருந்த நோட்டுகளை மதிப்பார் இலர்.

இந்நெருக்கடியான நிலையில் நோட்டுகளை வைத்திருந்த மக்கள் செய்வதறியாது அலறினார்கள். தென் மாகாணங்களில் பண விஷயமாகக் குழப்பம் உண்டாயிற்று. தெருக்களில் காணப்பட்ட மக்கள் அனைவரும் சேனையில் சேர்க்கப்பட்டார்கள். அவர்கள் பாவம்! சண்டையைப்பற்றி ஒன்றுமே அறியாதவர்கள். இவ்வாறு தென் மாகாணங்கள் பணப் பஞ்சத்தாலும் போதிய வீரர்கள் இல்லாமலும் தத்தளித்தன. எனினும், அவை தைரியத்தோடு அதுவரை போராடினது பாராட்டத் தக்கதே.

பகைவரது சேனைத் தலைவர் வட மாகாணங்களின் சேனைத் தலைவரைச் சமாதானத்திற்கு அழைத்தார். அவர் லிங்கனது யோசனையைக் கேட்டார். லிங்கன் உடனே, “பகைவர்கள் தங்கள் போர்க் கருவிகளை எறிந்துவிட்டு நம்மிடம் அடைக்கலம் புகும் வரையில் போரைத் தொடர்ந்து நடத்துக. எவ்வித உடன்படிக்கைக்கும் இடங் கொடுக்க வேண்டா,” எனக் கண்டிப்பான கட்டளை இட்டார்.

லிங்கன் தாராள நோக்கம் கொண்டவர். பகைவர் தமது விருப்பப்படியே கீழ்ப்படிவர் என்பது அவருக்குத் தெரியும். எனினும், அவர்களைப் பரம ஏழைகளாக்க அவர் மனம் விரும்பவில்லை. அதனால், அவர்,

"தென் மாகாணங்களில் இருந்த அடிமைகட்கு விடுதலை அளித்தல் வேண்டும்; அதன் பொருட்டு அடிமைகளை விலை கொடுத்து வாங்கின வியாபாரிகட்கு நஷ்ட ஈடாக அரசாங்கப் பணத்திலிருந்து நாற்பது கோடி டாலர் கொடுப்பது நலம்,' என்று யோசித்தார். அவர் தமது யோசனையைத் தம் அமைச்சர்களிடம் அறிவித்த போது, அவர்கள், "என்ன! நாற்பது கோடி டாலரா!" எனக் கூவினர். வட மாகாணங்களின் குடிகளும் அதற்கு உடன்படவில்லை. லிங்கன் மிகுந்த வருத்தத்தோடு அந்த யோசனையை ஒதுக்கி வைத்து-விட்டார்.

'நாற்பது கோடி டாலர் கொடுப்பதால் அடிமை வியாபாரிகள் இன்பமடைவார்கள்; தென் மாகாணங்கள் வாய் திறவா; துன்பம் ஒருவாறு நீங்கும்; அடிமைகளும் சுதந்திரத்தைப் பெறுவார்கள்; ஐக்கிய அரசியல் அழியாதிருக்கும்,' என்பதே லிங்கனது பரந்த எண்ணமாகும். அந்நோக்கத்தைக் கொண்டே அவர் அடிமை வியாபாரிகட்கு நாற்பது கோடி டாலர் கொடுப்பதென்னும் தீர்மானத்தைக் கொணர்ந்தனர். எனினும், அது பொது மக்களால் ஏற்றுக்கொள்ளப்-படவில்லை.

1865 - ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 31-ஆந் தேதி காங்கிரஸ் மஹா சபை கூடிற்று; லிங்-கன் கொண்டு வந்த அடிமை ஒழிப்பு மசோதாவை ஆராய்ந்தது. சபையில் இருந்த பகைவர் அடிமை ஒழிப்பு மசோதாவை எதிர்த்தனர். இறுதியில்

மசோதா ஓட்டுக்கு விடப்பட்டது. மசோதாவுக்குச் சாதகமாக 119 ஓட்டுகள் கிடைத்தன ; எதிர்ப்புக்கு 56 கிடைத்தன. எனவே, அடிமை ஒழிப்பு மசோதா சட்டமாயிற்று. ஆ! காங்கிரஸ் மஹா சபையிற் கூடி இருந்த ஆடவரும் பெண்டிரும் நீண்ட நேரம் கர கோஷம் செய்தனர். வாஷிங்டன் நகரில் மசோதாவின் வெற்றியைக் குறித்து நூறு குண்டுகள் போடப்பட்டன. லிங்கன் தமது இளமைப் பருவத்தில் நியூ ஆர்லியன்ஸ் நகரில் அடிமை வியாபாரத்தைக் கண்ணுற்றபோது கூறின சபதத்தை வெற்றிகரமாக நிறைவேற்றிவிட்டார் ; அடிமைத்தனத்தைச் சட்ட மூலமாக அமெரிக்காவினின்றும் அடியோடு ஒழித்துவிட்டார்.

லிங்கன் முடிக்கக் கருதியிருந்த மஹத்தான இரண்டு வேலைகளில் ஒன்று முடிந்தது. மற்றொன்று ஐக்கிய அரசியலில் பிளவேற்படாமையாகும். அதுவும் வெற்றிகரமாக முடிய வேண்டிய நாள் குறுகிவிட்டது. 1865-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 7-ஆந் தேதி தென் மாகாணங்களின் சேனைத் தலைவரான ஜெனரல் லீ அடைக்கலம் புகுந்தார். தென் மாகாணங்களின் தலை நகரான ரிச்மாண்டும் கைப்பற்றப்பட்டது. அதனைக் கைப்பற்று முன்னரே அந்நகர வாசிகள் அதனைக் காலி செய்து ஓடிவிட்டனர். அங்கிருந்த புதிய குடியரசுத் தலைவர் ஜப்பர்சன் ஓடிவிட்டார். எனினும், அவர் பிடிக்கப்பட்டு நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார்.

தென் மாகாணங்களின் திமிர் அடக்கப்பட்டது. அவை என்றும் ஐக்கிய அரசியலினின்றும் பிரிக்கப்படாவென்பது உறுதியாயிற்று. தென் மாகாணங்களில் இருந்த அடிமைகள் சுதந்திரம் பெற்றார்கள். லிங்கன் தாம் விரும்பின இரண்டு மஹத்தான—உலகம் இன்றும் போற்றத்தக்க காரியங்களைச் செய்து முடித்தார். அவர் தம் பெயரை உலகம் உள்ளளவும் நிலைநிறுத்திப் புகழ் பெற்றார்.

# 10. முடிவும் குணாதிசயங்களும்

மேற் கூறப்பெற்ற இரண்டு பெரிய நன்மைகள் நாட்டுக்கு உண்டான சமயத்தில், லிங்கனைக் கொல்லப் பலர் சதி செய்தனர். அவரை இது விஷயமாக நண்பர் பலர் எச்சரித்த போது அவர் புன்சிரிப்போடு, "நண்பர்களே, நான் பகைவர்க்கும் நண்பர்க்கும் எப்பொழுதும் பேட்டி அளிப்பவன். இப்பொழுது நான் திடீரெனக் காவலுடையவனாயிருத்தல் இயலாது. நான் எல்லோரையும் நண்பராகக் கருதுபவன். நான் பகைவர் கையில் அகப்படாமல் இருக்க வேண்டுமாயின், இரும்புப் பெட்டியில்தான் இருக்க வேண்டும். கொலையாளி கையால் இறப்பது ஒரு முறையே. ஆனால், காவலை அதிகரித்து எந்நேரமும் உயிருக்கு அஞ்சி வாழ்தல் பல முறை இறத்தலுக்கு ஒப்பாகும். அத்தகைய வாழ்க்கையை நான் விரும்பவில்லை. நான் நாட்டுக்குச் செய்ய வேண்டிய இரண்டு மகத்தான வேலைகளை வெற்றி பொருந்தச் செய்துவிட்டேன். இனி நான் இறக்கச் சித்தமாயிருக்கின்றேன்," என்று பெருந்தன்மையும் பெருமிதமும் தோன்றக் கூறினார்.

1865-ஆம் ஆண்டு ஏப்பிரல் மாதம் 14-ஆந் தேதி கிறிஸ்தவர்க்குகந்த நல்ல வெள்ளிக்கிழமை (Good Friday) என்னும் பெருநாளாகும். அன்று எல்லாக் கோயில்களிலும் பிரார்த்தனை நடைபெற்றது. வாஷிங்டன் நகர மாந்தர் போரில் உண்டான வெற்றியால் கரை கடந்த மகிழ்ச்சி எய்தினர். கணவரைப் போரில்

இழந்த மங்கையர் பலர், தாய்நாட்டு நலத்தின்பொருட்டுத் தம் ஆருயிரை அளித்த கணவரை வாழ்த்தி மகிழ்ந்தனர். பலர் தம் கணவர் வருகையைப் பேராவலோடு எதிர் நோக்கி இருந்தனர். தாய்மார் பலர், 'போருக்குச் சென்ற நம் பிள்ளைகள் வெற்றியுடன் திரும்பி வருகிறார்கள்,' என்ற மகிழ்ச்சியால் வீடுகளை அணிபெறச் செய்தனர்.

அந்தப் பரிசுத்த நாளில் தலை நகரில் நடைபெற்ற நாடகம் ஒன்றுக்கு லிங்கன் செல்வதாக ஏற்பாடாகி இருந்தது. அதனையறிந்துகொண்ட ஜான் வில்க்ஸ் பூத் (John Wilkes Booth) என்பவன் தன் தோழர்களோடு ஓர் இடத்திற் கூடினான். அவன் லிங்கனைக் கொல்வதென்பதும், உள் நாட்டுக் காரியதரிசியான செவார்ட்டு என்பவரை லெவிஸ் பவல் (Lewis Powell) என்பவன் கொல்வதென்பதும், குடியரசின் உப தலைவரை வேறொருவன் கொல்வதென்பதும் முடிவாயின. உடனே பூத்து நாடகக் கொட்டகைக்குச் சென்று, அதன் நிலைமையையும் தலைவர் அங்கு இருக்க வேண்டிய இடத்தையும் கவனித்துக்கொண்டான்.

குறித்த நேரத்தில் நாடகம் தொடங்கப்பட்டது. சிறிது நேரங் கழித்து லிங்கன் தம் மனைவியாரோடும் மிஸ் ஹாரிஸ், மேஜர் ராத்போன் என்பவரோடும் கொட்டகைக்குள் நுழைந்தார். ஆ! ஐக்கிய அரசியல் அமைப்பைச் சிதறுண்டு போகாது காப்பாற்றியவரும் அடிமைத் தனத்தைச் சட்ட மூலமாக ஒழித்தவருமான தங்கள் குடியரசுத் தலைவரை மக்கள் எழுந்து

குதூகலமாக வரவேற்றார்கள். லிங்கனும் அவருடன் சென்றவரும் தத்தம் இருக்கையில் அமர்ந்து நாடகத்தைக் கவனித்து வந்தனர்.

இரவு மணி பத்தாயிற்று. பூத்து நன்றாகக் குடித்துவிட்டுத் தன் தீச்செயலைப் புரியக் கிளம்பினான்; லிங்கன் இருந்த இடத்தை அண்மினான்; அங்கிருந்த காவலனுக்குத் தான் வைத்திருந்த நுழைவுச் சீட்டைக் காட்டித் தலைவர் இருந்த இடத்தை அடைந்தான். ஆ! அக்கொடியவன் அமெரிக்கரின் நற்றந்தையாரான லிங்கன் பின் புறத்தில் நின்று ஒரு விநாடிக்குள் அவர் கழுத்தை நோக்கிச் சுட்டான். உடனே மேஜர் ராத்போன் அவன் மீது பாய்ந்தார். அப்பாதகன் தான் வைத்திருந்த உடை வாளை அவர் மார்பிற் பாய்ச்சிவிட்டு ஓடினான். "அவன் நமது தலைவரைக் கொன்று விட்டான்," என ராத்போன் கூவினார். உடனே நாடகக் கொட்டகையில் குழப்பம் உண்டாயிற்று. இக்குழப்பத்தினிடையே பூத்து, தப்பி ஓடினான் ; ஓடுகையில் அவன் விழுந்தான் ; ஒரு கால் முறிந்துவிட்டது ; பின்னர் அவன் தன்னைப் பிடிக்க வந்தவர்களோடு போராடுகையில் உயிர் துறந்தான்.

கோட்டகையில் இச்சதி நடந்த சமயத்தில் பவெல் என்னும் கொடியவன் செவார்ட்டு மாளிகையை அடைந்தான். அப்பொழுது செவார்ட்டு நோயுற்றுப் படுக்கையில் இருந்தார். அவர் அருகில் இருவர் இருந்தனர். பவெல் அவர் இருந்த இடத்தை அடைந்தான் ; தன் வாளை உருவி அவர் மார்பிற் செலுத்தி-

னன்; அவர் அருகில் இருந்த இருவரையும் காயப்படுத்தி வெளியே ஓடிவிட்டான். எனினும், அவன் பின்னர்ப் பிடிக்கப்பட்டுத் தூக்கிலிடப்பட்டான்.

சேவார்ட்டும் உபதலைவரும் பல நாட்களுக்குப் பின்னர் குணமடைந்தனர். ஆனால், அந்தோ! ஏப்ரஹாம் லிங்கன்—அடிமைகளின் இரட்சகர்—மறுநாள் காலையில் இவ்வுலக வாழ்வை நீத்தார். அவர் இறந்தார் என்ற துக்ககரமான செய்தியைக் கேட்டு அவர் பகைவரும் கண் கலங்கினர். அவர் இறந்த மறு நிமிடமே அவரது பெருமை எல்லோராலும் உணரப்பட்டது. அவர் அமெரிக்காவுக்குச் செய்த இரண்டு மஹத்தான நன்மைகளை அவர்கள் எண்ணி எண்ணி மகிழ்ந்து, அவரது ஆருயிர் பிரிந்ததை எண்ணி வருந்தினார்கள். முதலில் அவரைப் 'படிப்பில்லாதவன்—மூடன்—தலைவனாயிருக்க யோக்கியதை அற்றவன்,' எனப் பரிகசித்த பகைவரும் அவருடைய அருமை பெருமைகளை அன்றே உணர்ந்தனர்; அத்தகைய மாபெருந்தலைவரைக் கொலை செய்யக் காரணராயிருந்த தம்மைச் சபித்துக்கொண்டனர்; அவருடைய பெறுதற்கரிய குணாதிசயங்களை எண்ணி எண்ணிக் கண்ணீர் விட்டனர்; "இனி இத்தகைய சுயநல மற்ற மஹான் கிடைப்பது அருமை! அருமை!!" என்று கூறி அலறினர்.

உலகில் தோன்றிய மிகச் சிறந்த அரசியல் நிபுணருள் ஏப்ரஹாம் லிங்கன் ஒருவர். அவர் குடியரசுத் தலைவராக இருந்திராவிடின், நாம் இப்பொழுது

அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களைக் காண்பது இயலாது. அவை இரண்டாகப் பிரிந்திருக்கும்; பெருமையற்று இருக்கும்; அடிமைத்தனமும் தலை விரித்தாடிக்கொண்டு இருக்கும். அமெரிக்காவின் பெருமையைப் பாழாக்கி வந்த அடிமைத்தனத்தை அடியோடு அகற்றினதே அவர் பெயர் உலகெலாம் பரவக் காரணமாயிருந்தது. அப்பெரியார் என்றும் அடக்கமும் வீரமும் பெருந்தன்மையும் களங்கமற்ற மனமும் உடையவராக இருந்தார். 'நாடு நன்மை பெற வேண்டும்,' என்ற எண்ணமே அவரது வாழ்க்கையின் உயர்ந்த லட்சியமாக இருந்தது.

'ஏப்ரஹாம் லிங்கனை இனி நாம் காண இயலாது. அவர் நாட்டின் நலனைக் காக்க உயிர் விட்ட மஹா வீரர்களோடு சேர்ந்துவிட்டார். அவர் 'தந்தையார்— லிங்கன்' (Father Lincon) எனப் போர் வீரராலும் நம்மாலும் பெருமைப்படுத்தப்பட்டவர். அவர் இருந்திராவிடின் ஐக்கிய அமைப்புச் சிதறுண்டிருக்கும். அடிமை வர்த்தகம் பரவியிருக்கும். இவ்விரண்டும் நேர விடாமற் காத்த அப்பரம புருஷரின் பெருமையை நினைந்து பாடுவோம்! அவர் ஆன்மா அமைதியுறுமாக!!' என்று அமெரிக்கர் கூறிப் பிரார்த்தனை புரிந்தனர்.

தலைவர் லிங்கனது உடலை ஸ்பிரிங் பீல்டில் அடக்கம் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது. ஸ்பிரிங்பீல்டிலேதான் லிங்கன் இருபத்தைந்தாண்டுகள் வசித்தார்; அங்குத்தான் பல பிள்ளைகளைப் பெற்றார்

ஒரு பிள்ளையைப் புதைத்தார்; அங்கிருந்துதான் மாகாணச் சட்ட சபைக்கு அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்; அங்கிருந்துதான் காங்கிரஸ் மஹா சபைக்கும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்பரிசுத்த இடத்திலிருந்துதான் அவர் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு வாஷிங்டனுக்குப் புறப்பட்டார். அத் தூய்மையான இடத்திலேயே அவரது உடல் புதைக்கப்பட வேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டது நியாயமேயன்றோ?

வாஷிங்டன் நகருக்கும் ஸ்பிரிங் பீல்டுக்கும் இடையே பல பெரிய நகரங்கள் இருக்கின்றன. அந்நகரங்களிலிருந்து, 'தலைவர் உடல் எங்கள் நகரத்தில் இரண்டொரு நாள் இருக்குமாறு செய்யவேண்டும்,' என்ற வேண்டுகோள் ஒன்றன் பின் ஒன்றாக வந்து குவிந்தன. அந்தந்த நகரத்தார் தலைவரது உடலுக்கு உரிய மரியாதை செய்து, பிரார்த்தனை புரிந்தனர். இத்தகைய அளவிடற்கரிய உபசாரம் வேறெந்த அமெரிக்கத் தலைவருக்கும் நடந்ததே இல்லை எனின், பொது மக்கள் லிங்கன்பால் கொண்டிருந்த பெருமதிப்பைப்பற்றி என்னென்பது!

மே மாதம் 3-ஆந் தேதி லிங்கன் உடல் ஸ்பிரிங் பீல்டை அடைந்தது. அஃது அந்த இடத்தில் பல்லாயிரக் கணக்கான அமெரிக்கரும் விடுதலை பெற்ற அடிமைகளும் சூழ எடுத்துச் செல்லப்பட்டது; எல்லோரும் நீண்ட நேரம் பிரார்த்தனை செய்தனர். பின்பு அவர் உடல் குறித்த இடத்தில் புதைக்கப்பட்டது.

அந்த இடத்தில் கட்டப்பட்ட சமாதி, அவ்வொப்புயர்வற்ற மாபெருந்தலைவரின் அருமை பெருமைகளை விளக்க அமைந்ததொரு சின்னமாக இன்றும் இலங்குகின்றது.

லிங்கன் ஓர் எளிய குடும்பத்திற் பிறந்தவர்; எனினும், தம் ஊக்கத்தாலும் உழைப்பாலும் கல்விகற்றுக்கொண்டார்; எத்தகைய கடுமையான வேலையையும் செய்யக் கற்றிருந்தார்; தம்பெருமை கொண்டவர் அல்லர்; பொது மக்களின் நம்பிக்கைக்கு உரியவராக இருந்தார்; சிறந்த ஒழுக்கம் உடையவர்; பகைவரும் குற்றங் காண இயலாத ஒழுக்கம் உடையவர் ; தந்நலமற்றவர்; குடிகளின் நன்மையையே பெரிதெனக் கருதினவர்; எக்காரணத்தை முன்னிட்டும் அரசியலில் பிளவு ஏற்படுமாறு செய்யலாகாதென்ற சிறந்த கொள்கை உடையவர் ; அக்கொள்கையை மனவுறுதியோடு மிக்க நெருக்கடியான நிலையில் நிலை நிறுத்தினவர்; அமெரிக்காவின் பெருமதிப்பைப் பாழாக்கி வந்த கொடிய அடிமைத்தனத்தை அறவே அகற்றினவர்; தமது முயற்சியில் விட்டுக் கொடாதவர்; தாம் நினைத்தவற்றைச் சாதித்தவர். இன்று அமெரிக்கா, உலகில் ஒப்புயர்வற்ற நாடாக விளங்குகின்றதற்குக் காரணம் லிங்கன் ஏற்படுத்தின அரசியற் சமாதானமே எனின், அப்பெரியார்தம் பெருமை சொல்லவும் எளிதோ ! ஜார்ஜ் வாஷிங்டன் அமெரிக்காவைச் சுதந்திர நாடாக்கினர். **ஏப்ரஹாம் லிங்கன் அமெரிக்காவைப் பிரிக்க முடியாதபடி ஒன்றுபடுத்தினர்.**

---

Printed at the Liberty Press, G. T. Madras.